## ஸ்ரீ காஞ்சி முனிவரின் அமுதமொழி

இறைவனின் திருவருளால் சுபிட்சமும் ஆத்மீக உயர்வும் பொங்கிப் பெருகட்டும். இன்றைய உலகுக்குச் சுபிட்சமும் ஆத்மீக உயர்வுமே மிகமிகத் தேவையாக இருக்கின்றன.

ஒவ்வொருவரும், நமக்குக் கஷ்டம் இருந்தாலும் மற்றவருக்கு உபகாரம் செய்யவேண்டும் என்ற எண்ணம் கொண்டால் அதுவே லோக துக்க நிவர்த்திக்கு ஆதாரமாகும். உபகாரம் சின்னதானாலும் பெரியதானாலும், அது உபகாரந்தான். நம்முடைய ஜன்மாவில் நாம் ஒவ்வொருவரும் நம் சக்திக்கு இயன்றபடி ஒரு நிலையான தர்மத்தைச் செய்து இஹலோக க்ஷேமத்தையும், பரலோக க்ஷேமத்தையும் அடைய வேண்டும்.




# ஹிந்துமத விளக்கம்

## பாரத தேசம்

உலகங்கள் மொத்தம் பதினான்கு. அதில் மேலே புவர்லோகம் - சுவர்லோகம் - மஹர்லோகம் - ஜனோலோகம் - தபோலோகம் - பிரம்மலோகம் என்று ஆறும் நாம் வாசிக்கும் பூலோகத்தின் கீழே, அதல - விதல - சுதல - தலாதல - ரஸாதல - மஹாதல - பாதாள என்று ஏழு உலகங்களும் இருக்கின்றன. நாம் வசிக்கும் உலகத்திற்கு பூலோகம் என்று பெயர். இந்த பூலோகத்திலும் அநேக கண்டங்கள் அதாவது பகுதிகள் இருக்கின்றன.

அவைகளுள், ஜம்பூ த்வீபத்தில் - பாரத வருஷத்தில் - பரத கண்டத்தில் - நமது பார்த தேசம் இருக்கிறது. இது ஒரு காலத்தில் மிகவும் விஸ்தாரமாக இருந்தது. இந்த தேசத்தில் ஹிமவத் பர்வதம் இருக்கிறது; இதுதான் உலகிலுள்ள பர்வதங்களுள் மிகப்பெரிய பர்வதம். இதே போல் விந்தியப் பர்வதம் என்று ஒன்று இருக்கிறது. அந்த விந்திய மலையை ஓர் எல்லைக் கோடாக வகுத்து அதற்கு வடக்கிலும் - தெற்கிலும் என்று இரண்டு பகுதிகளாகப் பிரித்து, வடக்குப் பாகத்திலுள்ளவர்கள் கௌடர்கள் என்றும் தென் பாகத்திலுள்ளவர்கள் திராவிடர்கள் என்றும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

திராவிடர்கள் - கௌடர்கள் என்பது ஒரு வகுப்பாரைக் குறிக்கும் பெயரல்ல. அந்தப் பகுதியில், அந்த பிராந்தியத்தில் உள்ள எல்லோருக்குமே அந்தப் பெயர்தான்.

இந்த தேசத்தில் அநேக புண்ணிய நதிகள் இருக்கின்றன. கௌட - திராவிட என்ற பேதா பேதமில்லாமல் நாட்டின் ஒருமைப் பாட்டிற்காக அநேக புண்ணிய க்ஷேத்திரங்களும் இருக்கின்ற முக்கியமான நதிகள், கங்கை - யமுனை - சரஸ்வதி - கோதாவரி - நர்மதா - சிந்து - காவேரி. அதேபோல க்ஷேத்திரங்களுள் காசி முதல் இராமேஸ்வரம் வரை பத்ரிநாத் - கேதாரநாத் - முதல் கன்னியாகுமரி வரை அனேக க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. இவைகள் எல்லாவற்றிற்கும் பாரத தேசத்திலுள்ள எல்லா மக்களும் எந்தவிதமான வேற்றுமையுமற்று யாத்திரை செய்து வருகிறார்கள்.

இந்த தேசத்திலுள்ள சிறிய கிராமம் முதல் பெரிய நகரம் வரையிலுள்ள ஒவ்வொரு பகுதியும் புனிதமான புண்ய பூமியென்று நமது மத நூல்களில் சொல்லப் பட்டிருக்கிறது. இந்தக் கருத்தை வெளிநாட்டாரும் ஏற்று, இந்தப் பூமியிலேயே வந்து இருந்து, இந்தப் புண்ய பூமியிலேயே இறக்க வேண்டுமென்றும் பலர் வந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே நமது பாரத தேசம் ஒரு புனிதமான தேசம் - ஒரு புண்ணியமான தேசம். இந்தப் பாரத தேசத்தை அந்நிய நாட்டார்கள், அநேகம் பேர்கள் அதாவது பிரஞ்சுக்காரர் - டச்சுக்காரர் - போர்ச் சுக்கிசியர் - ஆங்கிலேயர் - முகலாயர் போன்று பலர் ராஜ்யபாரம் செய்திருக்கிறார்கள்.

21-4



## 2. நமது மதம்

உலகில் அநேக தேசங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு தேசமும் ஒவ்வொரு மதத்தை அடிப்படையாகக் கொண்டு இருக்கின்றது. நமது தேசம் பெருவாரியான ஹிந்துக்களைக் கொண்டிருந்தபோதிலும் மற்ற எல்லா மதத்தினருக்கும் வசிப்பதிலிருந்து சகலவிதமான உரிமையையும் பரிபூரணமாக அளித்து வருகிறது.

உலகிலுள்ள ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு காலத்தில் - ஒரு தேசத்தில் ஒரு நாளில் - ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டு வந்துகொண்டிருக்கிறது. ஆனால் நமது ஹிந்து மதமானது, ஒரு காலத்தில் - ஒரு தேசத்தில் - ஒருவரால் தோற்றுவிக்கப்படாமல் உலகம் தோன்றின காலம் முதலாய் வந்து கொண்டிருக்கும் ஒரு மதம் - ஒப்பற்ற மதமும்கூட.

ஹிந்து மதத்தில், அனேக உட்பிரிவுகளும் தத்துவப் பிரிவுகளும் - சம்பிரதாயப் பிரிவுகளும் - சட்டங்களின் பேதங்களும சாமான்யமாக நமக்குத் தோன்றினாலும், அடிப்படையில் மாறுதலே கிடையாது. ஹிந்துக்களாய் இருப்பவர்கள் எந்தப் பகுதியில் - எந்தக் கலாச்சாரத்தில் - எந்த தேசத்தில் - எந்தப் பாஷை பேசுவதாக இருந்து வந்தாலும் அவர்கள் இலட்சியமெல்லாம் ஒரே இலட்சியமாக இருந்து வந்தததால்தான், எத்தனையோ இடர்ப்பாடுகளையெல்லாம் தாண்டி இன்றும் பெயர் சொல்லிக் கொண்டிருக்கிறது.

ஹிந்து மதமானது, ஆன்மீக பலத்தால் மாத்திரமே இருந்து வருகிறதே ஒழிய, பிரச்சார பலத்தினாலோ - எண்ணிக்கைப் பலத்தினாலோ இருக்கவில்லை.

பிரச்சாரம் முதலியவைகள் எல்லாம் ஆன்மீக மார்க்கத்தைத் தூண்டுவதற்காகத்தான். ஹிந்து மதத்தில் யுகதர்மத்திற்கு ஏற்றவாறு, அவ்வப்போது மதாச்சாரியர்கள் - மகா புருஷர்கள் - சித்த புருஷர்கள் - ஞானிகள் முதலியோர்கள் தோன்றி அந்தந்த தேச காலத்திற்கு ஏற்றவாறு, ஹிந்துமத தர்மத்தைக் காப்பாற்றிக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

எல்லோருமே ஹிந்து மதத்தின் அடிப்படையான மூலநூல்களுக்கோ - கலாச்சாரத்திற்கோ - மாறுதல் வராத முறையில் தங்கள் பணிகளைச் செய்து முடித்திருக்கிறார்கள். ஆகவே தான் சாமான்யமாக தத்துவ ரீதியில்கூட அநேக பிளவுகள் இருப்பதுபோலத் தோன்றும். இருந்தும் ஹிந்து மதத்தின் சிறப்பானது வேற்றுமையிலும் ஒற்றுமை என்ற இலட்சியத்தின் கீழ் இருந்து கொண்டிருக்கிறது.

## 3. ஹிந்து மத ப்ரமாண நூல்கள்

ஹிந்து மதத்திற்கு ப்ரமாணமான நூல்கள் வேதங்கள். இவை ருக் - யஜுர் - சாமம் - அதர்வணம் என நான்கு வகைப்படும். ஒவ்வொரு வேதமும் அநேக கிளைகளைக் கொண்டது. இந்த வேதங்கள் ஒரு காலத்தில் - ஒரு நாளில் - ஒருவராலும் எழுதப்படாமல் சப்த ஒலிகளாகவே இருந்து வருகின்றன. இந்த வேதங்களைக் கிளைகளாகப் பிரித்து வைத்தவர் வேதவியாஸர். துவாபர யுகத்தின் கடைசியில். கலியுகத்தில் வரும் மக்களுக்குப் புத்தி - சக்தி - ஆயுசு குறைவை அனுசரித்து, வேதவியாஸர் கிளைகளாகப் பிரித்தார்.

21-4



ருக் வேதத்தை 21 கிளைகளாகவும் - யஜுர் வேதத்தை 101 கிளைகளாகவும் - சாம வேதத்தை 1000 கிளைகளாக வும் - அதர்வண வேதத்தை 9 கிளைகளாகவும் பிரித்து வைத்தார். வேதங்களில் கர்ம காண்டம் - ஞான காண்டம் என இரு பாகங்கள் வருகின்றன. உபநிஷத் பாகத்தை ஞான பாகமென்றும் - மற்ற பாகத்தை கர்மபாகம் என்றும் சொல்லுவார்கள். கர்மகாண்ட பாகத்தில், நிறைய தேவதைகளின் பெயர்கள் - ரிஷிகளின் பெயர்கள் முதலியவைகள் வருகின்றன. அபௌரி ஷேயமான மனிதரால் ஆக்கப்படாததான; வேதங்களில் இந்த ரிஷிகளின் - தேவதைகளின் பெயர்கள் வருவதை அனுசரித்து இன்னென்ன ரிஷிகளால், இன்னென்ன தேவதைகளால் வேதம் தோற்றுவிக்கப்பட்டதென்று சிலர் கூறுகிறர்கள். ஆனால் வேதமானது ஒருவராலும் இயற்றப்படாமல் சப்த அலைகளாகவே ஆகாயத்தில் நிறைந்து நிற்கின்றன. அந்த சப்த ஒலிகளை விசேஷ தவத்தின் மூலம் காதுக்கு விசேஷ சக்திபெற்று ச்ருதி என்பதான அந்த சப்தங்களை அறிந்துகொண்டு அதன்மூலம் சிஷ்யர்களுக்குப் பரம்பரை பரம்பரையாக உபதேசம் செய்து கொண்டு வந்தார்கள். பிற்காலத்தில் யார் யார் தங்களுக்கு உபதேசம் செய்தார்களோ அந்த மஹரிஷிகளின் பெயர்களைக் குறிப்பு எடுத்துக் கொண்டு தாங்கள் கற்றுக்கொண்டு, அந்த வேதபாகத் தையும் குறிப்பு எடுத்துக்கொண்டு அந்த வேதபாகம் ஆரம்பிக்கும்போது அந்தந்த குருவை நினைத்து அவரவர்களுக்கு மானசீகமாக அஞ்சலி செய்துவிட்டு வேத பாகங்களை ஆரம்பம் செய்து கொண்டு வந்தார்கள். ஆகையினால்தான் ஒவ்வொரு வேதபாகங் களின் முன்பாக ரிஷிகளின் - தேவதைகளின் பெயர்களும், அந்த மந்திரங்களைச் செய்வதினால்

ஏற்படும் பலன்களும், அந்த மந்திரங்களில் சொல்லப் பட்டிருக்கும் விருத்தங்களும் மேலே சொல்லப் பட்டிருக்கும்.

ஆகவே மந்திரங்கள் அனாதி, அதைக் கண்டுபிடித் தவர்கள் - அனுபவத்திற்குக் கொண்டு வந்தவர்கள் ரிஷிகள். ஆகவே ரிஷிகளின் காலத்தை கணக்கில் வைத்துக்கொண்டு ரிஷிகளால் வேதம் ஆக்கப்பட்டது என்று சொல்லக் கூடாது. உதாரணமாக, ரேடியோவில் பழங்கால தியாகராஜ கிருதி போன்ற பல பாடல்களைத் தற்போது வித்வான்கள் பாடுகிறார்கள். ஆனால் பாடுபவர்களின் பெயர்தான் பிரபலமாக இருக்கிறது. கிருதிகள் பழமையாக இருந்தாலும் பாடுபவர்களின் மூலம் அந்தப்பாட்டு பிரசித்தியை அடைகிறது.

இன்னமும் கண்டுபிடிக்க முடியாத அநேக வேத மந்திரங்கள் இருக்கின்றன. அதேபோல் எவ்வளவு கிளைகளாகப் பிரிக்கப்பட்டது என்று வரலாற்றில் இருக்கிறதோ அத்தனை கிளைகள் இப்பொழுது தென்படவில்லை. ஒவ்வொரு வேதத்திலும் ஒன்று இரண்டு கிளைகள் மாத்திரம் இருக்கின்றன. இந்த வேதங்களின் அர்த்தங்களையும் - ஸ்வரங்களையும் - பதங்களையும் - விருத்தங்களையும் புரிந்து கொள் வத்ற்காக ஆறு நூல்கள் வேதத்திற்கு அங்கமாக இருக்கின்றன. அப்படி ஒவ்வொன்றிலும் பல நூல்கள் இருக்கின்றன. ஆனால் இப்பொழுது அவற்றில் சிலவே கிடைக்கின்றன. சிட்க்ஷா - வியாகரணம் - சந்தஸ் - நிருக்தம் - ஜோதிஷம் - கல்பம்.

அதேபோல வேதத்திற்கு உபவேதங்களாக, ருக்வேதத்திற்கு ஆயுர்வேதம் - யஜுர் வேதத்திற்கு தனுர்

வேதம் - சாமவேதத்திற்கு காந்தர்வ வேதம் - அதர்வண வேதத்திற்கு அர்த்த சாஸ்திரம் இவைகள் இருக்கின்றன. வேதங்களின் அர்த்தங்களை அறிந்து கொள்வதற்காக, வித்யாரண்யர் என்றவர் வேத பாஷ்யங்களையும் இயற்றி இருக்கிறார்.

## 4. வேதத்தின் கருத்தை அடிப்படையாகக் கொண்ட நூல்கள்

ஒவ்வொரு மஹரிஷியாலும் வேதங்களை - வேத அர்த்தங்களைத் தெரிந்துக்கொண்ட பிறகு, அவைகளை நினைவில் வைத்துக்கொண்டு, சிஷ்யர்களுக்கு ஸ்லோக வடிவாகவோ - வசன நடையாகவோ உபதேசம் செய்தார்கள். ச்மிருதிகள் என்ற பெயரில் (நினைப்பு) நிறைய நூல்கள் இருக்கின்றன. ச்மிருதிகள் மஹரிஷி களால் இயற்ப்பட்டாலும், வேதங்களின் கருத்துக் களுக்குச் சிறிதும் விரோதமில்லாமல்தான் எழுதப் பட்டிருக்கும்; ஏனென்றால் வேதம் - வேத அர்த்தங் களின் அனுபவத்தின் நினைப்புதான் ச்மிருதி, ஆகவே அனுபவத்தை ஒட்டிதான் நினைப்பு இருக்குமே தவிர, தனியாக நினைப்பு இருக்காது. ஆகவே வேதத்தை ஒட்டித்தான் ச்மிருதிகளின் கருத்து இருக்கும். வேதத்திற்கு விரோதமாக இருக்காது.

வேதங்களில் நேரிடையாக ஒரு விஷயம் சொல்லப் பட்டிருக்கும். ச்மிருதிகளில் சிறிது விளக்கமாக அதே விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கும்; ஆகவே வேதவாக் கியங்களுக்கும் மாறுதல் கிடையாது; ச்மிருதி வாக்கியங் களுக்கும் மாறுதல் இருக்கக்கூடாது. இதுபோன்றுதான் புராணங்களும் அதுவும் மஹரிஷிகளால் எழுதப் பட்டிருந்தாலும், தொகுக்கப்பட்டிருந்தாலும், நடந்த

நிகழ்ச்சிகளும் - நடக்கப்போகும் நிகழ்ச்சிகளும் அனுபவத்தின் மூலம் முன்னதாகவே தெரிந்து கொண்டுதான் எழுதப்பட்டிருக்கின்றன. ஆகவே புராணங்களுள் ஒருநாளும் வேதங்களும், ச்மிருதிகளும் முரண்பாடான கருத்துகளைச் சொல்லாது. வேதங்களின் கருத்துக்களைச் சிறிது விளக்கமாக ச்மிருதிகளும் - அதிக விளக்கமாக புராணங்களும் போதிக்கின்றன.

புராணங்கள் 18 - உப புராணங்கள் 18 - இதிகாசம், மஹாபாரதம், இராமாயணம் ஆக 2 இவைகளெல்லாம் வேதத்தின் கருத்தை அடிப்படையாகக் கொண்டே எழுந்த நூல்கள்.

## 5. தத்துவ நூல்கள்

வேதங்களின் முடிவு பாகங்களில் இருப்பது உபநிஷத். அந்த உபநிஷத்களில் அநேக உபாசனைகளும் - தத்துவ ஞான விஷயங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. வேதங்களின் கருத்துக்களை சூத்திர வடிவமாக ஜெய்முனி மீமாம்ஸா சூத்திரங்களை எழுதினார். அதாவது வேதங்களின் முன் பாகத்திய கர்மகாண்ட பாகங்களுக்கு எந்தெந்த வேதவாக்கியத்தில் எந்தக் கருத்துடன் சொல்லப்பட்டிருக்கிறதென்று வேதக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு சூத்திரங்களை எழுதினார்.

சூத்திரம் - என்பதற்கு வேதங்களில் உள்ள பதங்களையோ கருத்துகளையோ தெரிவிப்பது என்று பொருள். இதேபோல் வேதத்தினுடைய முடிவு பாகமாகிய உபநிஷத்களின் கருத்துக்களை எந்தெந்த

உபநிஷத் வாக்கியத்திற்கு எந்தெந்த பொருளில் கருத்து என்று தீர்மானம் செய்வதற்காக உபநிஷத்களின் பதங்களைும் அல்லது கருத்துக்களையும் தெரிவிக்கும் முறையில் வேதவியாஸர் உத்திர மீமாம்ஸா சூத்திரம் அல்லது பிரம்ம சூத்திரம் என்ற பெயரில் ஒரு நூலை இயற்றினார்.

யோக சாஸ்திரங்களைக் குறித்து பதஞ்சலி முனிவர் தன் பெயரிலேயே பதஞ்சலி யோக சூத்திரம் என்ற ஒரு நூலே இயற்றினார். தர்க்க சாஸ்திர வாதிகள் தங்கள் கருத்துக்களை தெரிவிக்கும் வகையில் நியாய சூத்திரம் - வைசேஷிக சூத்திரம் என இரண்டு நூல்களை இயற்றி இருக்கிறார்கள். சாங்கிய தத்துவத்தைச் சேர்ந்தவர்கள் சாங்கிய சூத்திரங்களையும் - அதற்கு உண்டான கிரந்தங்களையும் இயற்றியிருக்கிறார்கள். இவைகள் ஒவ்வொன்றிற்கும் பாஷ்ய கிரந்தங்கள் - வியாக்யான கிரந்தங்கள் மற்ற மதங்களையும் கண்டனம் - தங்கள் சித்தாந்தங்களையே நிலைநாட்டுவது போன்ற விஷயங்களைக் கொண்டு அநேக நூற்றுக்கணக்கான தத்துவ கிரந்தங்கள் இருக்கின்றன.

தத்துவ சாஸ்திரங்கள் பொதுவாக மூன்று முறையில் இருக்கின்றன. வைணவ தத்துவ சாஸ்திரங்கள் வைகுண்ட லோகத்தில் பரந்தாமன் இருக்கிறான். அங்கு சென்று அவனுக்குக் கைங்கரியம் செய்து அவனுடன் இரண்டற்ற நிலையில் இருந்து விடுவது. சாங்கிய தத்துவ சாஸ்திரம்:- கடவுள் தத்துவத்தை ஒப்புக்கொள்ளாமல், ஜீவனுக்கும், உலகிற்கும் காரணமாக உள்ள சத்துவ - ரஜஸ் - தமஸ் முக்குணங்களின் வடிவமான பிரதாத் திற்கும் - விசாரத்தின் மூலம் வேற்றுமை அறிந்து கொள்வதே.

சைவ தத்துவ சாஸ்திரங்கள், இறந்த பிற்பாடு கயிலையிலுள்ள பரமசிவனிடம் சென்று பாலும் தண்ணீரும்போல் இரண்டாக இருந்தாலும் இரண்டும் ஒன்றாய் கலந்துவிடுவதுபோல் இரண்டறக் கலந்து நிற்கிறார்கள். அத்வைத வேதாந்த சித்தாந்தத்தில் தன்னைத்தான் உண்மையான நிலையில் அறிந்து கொள்வதன் மூலம் பிறவியில்லாத நிலையை அடைகிறான். தத்துவ ஞானத்தின் மூலம் தன்னுடைய உண்மையான சொருபம் தெளிவாகத் தெரிகிறது. தற்போது உலகம் - உலகத்திற்கு ஏற்படக் கூடிய காரியங்கள் - அதனுடைய பலன்கள் எல்லாம நிஜமாகத் தோன்றினாலும், தத்துவஞானம் வந்தவுடன் இவை யெல்லாம் பொய் என்ற அறிவு தோன்றிவிடும்.

இந்த உலகிலேயே இந்த மனித சரீரத்திலே முயற்சி செய்தால், தத்துவ ஞானத்தை அறிந்துகொள்ள முடியும். மறுலோகம் செல்ல வேண்டிய அவசியம் இராது. இதுபோன்று பல தத்துவ அடிப்படை கொண்ட கிரந்தங்கள் நூல்கள் - ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. பொதுவாக துவைதம் - விசிஷ்ட அத்வைதம் அத்வைதம் என்று மூன்று பிரிவுகளுக்குள் தத்துவ கிரந்தங்களும அடங்கி விடுகின்றன. இவைகளைத் தவிர பௌத்த - ஜெயின் - நாஸ்திக மத் தத்துவ கிரந்தங்களும் இருக்கின்றன.

## 6. இதர நூல்கள்

கோயில்கள், கட்டுவதற்கு வேண்டிய முறைகளைப் பற்றியும் - வீடுகள் கட்ட வேண்டிய முறைகளைப் பற்றியும் விளக்கமாகக் கூறும் வாஸ்து சாஸ்திர நூல்கள் - சில்ப சாஸ்திர நூல்கள் நிறைய இருக்கின்றன.

கோவில்களில் பூஜை செய்ய வேண்டிய முறைகள் முதல் - இறைவனுடைய தத்துவம் வரை சொல்லக்கூடிய ஆகம சாஸ்திரங்கள் இருக்கின்றன. இவைகளில் சிவனைப்பற்றி சொல்லக்கூடிய சிவாகமங்கள் - விஷ்ணு தத்துவத்தை விஷ்ணுவின் பூஜா முறையை சொல்லக்கூடிய வைகானச ஆகம முறையும் - "பாஞ்ச ராத்ர" என்று சொல்லக் கூடிய ஆகம முறையும் - 'சாக்த தந்திர' என்ற பெயரில் அம்பாளின் பூஜையும் - சிறு தேவதா வழிபாட்டு முறையைக் கூறும் நூல்களும் நிறைய இருக்கின்றன. ஒவ்வொரு தேவதாமூர்த்தி வழிபாட்டிற்கும் தனித் தனியே நிறைய நூல்கள் இருக்கின்றன.

## 7. வழிபாட்டு முறைகள்

ஹிந்து மதத்தில் பரமாத்மா ஒருவரே - அவர் எங்கும் நிறைந்தவரே, அவர் எங்கும் நிறைந்தவர் - எல்லாவற் றிற்கும் காரணமாய் உள்ளவர். ஞானம் - ஆனந்தம் இந்த வடிவமாக உள்ளவர். ஆனால் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அவரிடமுள்ள மாயாசக்தியினால் உலகெல்லாம் படைத்து - காத்து - சம்ஹரித்து வருகிறார். ஆனாலும் அவரை நேராக உலகைப் படைக்கும் கர்த்தா என்று கூறுவதில்லை. காரணம் மாயையின் மூலமே எல்லா காரியமும் நடைபெறுகிறது. இந்த பரமாத்மா உலகில் நடைபெற வேண்டிய காரியத்திற்காகவும் - ஜனங் கள் பரமாத்மாவை அறிந்து கொள்வதற்கு உதவியாகவும் சகுண வடிவத்தில் ஆகார உருவத்தில் உருவ வடிவத்தில் வருகிறார். அப்பொழுது அவருக்கு சிவன் - விஷ்ணு - பார்வதி விநாயகர் போன்ற பல பெயர்கள் வருகின்றன.

இந்த விக்ரஹ வடிவங்கள் ஒவ்வொரு யுகத்திலும் தேசத்தில் - உலகில் ஏற்படக்கூடிய அதர்மத்தை அழித்து

- தர்மத்தை நிலைநாட்டி - பூபாரத்தை குறைப்பதற்காக அவதார வடிவமாக ராமர், கிருஷ்ணர் போன்ற வகையில் அவதாரம் செய்கின்றனர். இவைகளைத் தவிர கிராம தேவதா மூர்த்திகளும் - எல்லையம்மன் தேவதைகளும் - காலரா அம்மை போன்ற நோய்கள் தீர்ப்பதற்குண்டான சிறு தேவதா மூர்த்திகளும நிறைய இருக்கின்றன. இதைத்தவிர, பல பெரிய வீரர்கள் இறந்துவிட்டால் அவர்களின் ஞாபகார்த்தமாக கருங்கல் முதலியன நட்டு, அதையே பலர் வணங்கியும் வருகிறார்கள். பெரிய மகான்கள் - ஞானிகள் இவர்கள் இறந்து விட்டால் அவர்களுக்கு சமாதி கட்டிவணங்கும் முறை வழக்கத்தில் இருந்து வருகிறது. ஆனால், ஆகம சில்ப சாஸ்திர பிரகாரம் கோவில்கள் கட்டுவது போன்ற வகைகள் சிவன் - பெருமாள் - கணபதி - ராமர் - கிருஷ்ணர் போன்ற மூர்த்திகளுக்குக் கோவில் கட்டுவதற்கு மாத்திரமே விதிமுறைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

கிராம தேவதைகள் முதலியவைகளுக்குக் கோவில்களுக்கு இடங்கள் மாத்திரமே குறிப்பிட்டு இருக்கின்றன. அநேகமாக சிவன் - விஷ்ணு போன்ற மூர்த்திகள் போன்று அநேக கிராம எல்லை தேவதைகள் உருவங்கள் கூட முழுமையாக இருக்காது. தலைப்பாகம் மாத்திரமோ அல்லது கற்கள் - மரங்கள் - சூலங்கள் இதுபோன்ற அடையாளச் சின்னங்கள் மாத்திரமே இருக்கும். அதேபோல் சிவன் - விஷ்ணு கோவில்போல், பிரதி தினம் இரண்டு வேளை - மூன்று வேளை நைவேத்யம் என்பது இல்லாமல் ஆண்டுக்கு ஒருமுறை அல்லது விசேஷ காலங்களில் மாத்திரமே அன்னப்படைப்பு போன்றவைகள் நடைபெறும். மக்களும் சிவன் விஷ்ணு கோவிலுக்குச் செல்லும் மக்கள்போல் தினம்தோறும்

செல்லாமல் ஆண்டுக்கு ஒரு முறையோ - விசேஷ காலங்களிலோ மட்டும் போவார்கள். போகும் முறைகூட, சிவன் - விஷ்ணு கோவிலுக்குப் போவது போலல்லாமல் ஆடை - உடுத்துவதிலிருந்து எல்லாவற்றிலும் மாறுதல் இருக்கும். படைப்புகளிலும்கூட அன்னம் படைப்பு மாத்திரமல்லாமல் ஆடு - கோழி போன்ற சில பிராணிகளைக் கொன்று அதன் மாமிசத்தையோ, இரத்தத்தையோ சேர்த்துப் படைப்பதுண்டு.

இந்த கிராம சக்திகள் - எல்லை தேவதைகள் முதலியவைகள் சிவன் - சுப்ரமண்யர் - விநாயகர் - பார்வதி போன்றவர்கள் சில அசுரர்களை வதம் செய்வதற்காக முற்பட்டபொழுது, அப்பொழுது அவர்களுக்குச் சகாயமாக வந்த தேவதைகளே! ஆகவே ஹிந்து சமயத்தில் உடலில் வியாதி இல்லாமல் நல்ல முறையில் உடல் இயங்குவதற்காக சிறு தேவதா வழிபாட்டு முறைகளும் - வாழ்க்கை முறையில் நாம் கோரிய பலன்களை அடைவதற்காக அல்லது நமக்கு தேவை உள்ள பொருள்களை அடைவதற்காக விநாயகர் - சிவன் - விஷ்ணு முதலிய மூர்த்திகளை வழிபாடு செய்து வருகிறார்கள்.

மேலும் எங்கும் நிறைந்துள்ள பரமாத்ம சொரூபத்தை அறிந்து கொள்வதற்காகவும் - பிறவியில்லாத பெறும்பேற்றை அடைவதற்காகவும் மனம் ஒருமை நிலை அடைவதற்காகவும் விநாயகர், சிவன், விஷ்ணு போன்ற மூர்த்தி வழிபாட்டு முறையும் - அந்த மூர்த்திகளைத் தியானம் செய்யும் முறைகளும் - சில உபாசனா முறைகளும் இருந்து வருகின்றன. எந்த காரியத்திலும் பலனில் ஆசையில்லாமல், தங்களுடைய கடமைகளையே கடவுளாகப் பாவித்து, சிலர் இறைவன்

அருளைப்பெற்று வருகிறார்கள் இறைவன் அருளைப் பெறுவதற்கு இவ்வளவு வழிபாட்டு முறைகள் இருந் தாலும் வழிகள் மாறுகின்றனவே தவிர, இலட்சியம் ஒன்றே!

## 8. கர்ம மார்க்கம்

கர்மா என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கை நல்லமுறையில் அமைத்து வாழ்வதற்காக, இன்னதைச் செய் - இன்னதைச் செய்யாதே என்று வேத சாஸ்திரங் களில் எவை சொல்லப்பட்டிருக்கின்றனவோ அதுதான் கர்மா, உதாரணமாக ஹிந்து சமயத்திலுள்ள ஒவ்வொரு வகுப்பாருக்கும் - ஒவ்வொரு தனி மனிதனுக்கும் பல காரியங்கள் அவனுடைய நன்மைக்காகவும் அவனுடைய குடும்ப நன்மைக்காகவும் - கிராம - தேச - உலக நன்மைக் காகவும் விதிக்கப்பட்டிருக்கின்றன.

அந்தக் காரியங்களைக் செய்வதன்மூலம் அவனுக்கும் நன்மை - அவன் குடும்பத்தாருக்கும் நன்மை - கிராம - தேச - உலகத்திற்கும் நன்மை; இவைகளை அவன் சரியாக செய்யாவிட்டாலும் தவறாகச் செய்தாலும் - செய்யாமல் விட்டு விட்டாலும் - விரோதமாகச் செய்தாலும் அதனால் அவனுக்கும் கஷ்டம், அவன் குடும்பத்திற்கும் கஷ்டம், கிராம-தேச உலகத்திற்கும் கஷ்டம், ஆண்டவன் பொதுவான காரணமாக இருந்து உலகைக் காத்து வந்தாலும், உலகத்திலுள்ள மக்களுடைய சுக துக்கங்களுக்குக் காரணம் அவரவர்கள் தங்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளைச் சரிவரச் செய்யாமலோ விட்டு விட்டோ - அதற்கு விரோதமாக செய்வதோ தான்.

இந்த கர்மா, மூன்று தினுசாக இருக்கிறது. ஆகாமி - சஞ்சிதம் - பிராப்தம் - என்று. ஆகாமி என்பது நாம் தற்பொழுது இந்த மானிடப் பிறவியில் எந்த நல்ல காரியங்களை - எந்த கெட்ட காரியங்களைச் செய்கி றோமோ அந்தக் காரியங்களின் பலன், வருங்காலத்தில் அதாவது பின் பிறவியில் பலனை அளிக்கும், ஆக்வே தற்போது நாம் செய்யும் நல்ல - கெட்ட காரியங்களே ஆகாமி கர்மா என்று சொல்லப்படுகிறது.

இவ்விதம் ஒவ்வொரு பிறவியிலும் பல நல்ல கெட்ட காரியங்கள் செய்கிறோம். இவையெல்லாம் ஒன்றாய் சேர்ந்து இருக்கும் பொழுது இவைகளுக்கு சஞ்சித கர்மா என்று பெயர். அவ்விதம் சேர்ந்த சஞ்சித கர்மாவிலிருந்து ஒவ்வொரு கர்மாவும் அதன் பலனைக் கொடுப்பதற்கு ஆரம்பிக்கப்படும். இந்தப் பிறவி இதில் வரக்கூடிய சுக துக்கம் இவைகளுக்குக் காரணமாக உள்ள கர்மாவுக்கு ப்ராரப்த கர்மா என்று பெயர். ஆகவே ஒரு மனிதன் செய்யக்கூடிய கர்மாவே. மூன்று நிலையில் மூன்று விதமான பெயரை அடைகிறது.

நாம் செய்த கர்மாவுக்கு ஏற்றவாறுதான் அதன் பலன் நமக்குக் கிடைக்கிறது. இந்த பலனை அனுபவிப் பதிலிருந்து ஒருகாலும் தப்பமுடியாது. ஆனால் இவைகளை அதிகமாக்கிக் கொள்வதோ - குறைத்துக் கொள்வதோ மனிதனுடைய முயற்சியைப் பொருத்து இருக்கிறது. உதாரணமாக, நல்ல மழை பெய்கிறது - அந்த மழையில் நாம் வெளியில் செல்லவேண்டுமானால், மழையில் நனைந்து கொண்டுதான் செல்லவேண்டும்; அதற்காக நாம் Rain Coat - குடை முதலியன போன்ற சாதனங்களை வைத்துக் கொண்டு அந்த மழையில் நாம்

சென்றால். அந்த மழை ஜலம் நம்மீது படாமல் அல்லது சிறிதளவு மாத்திரமே படுகிறது. ஆகவே நமது துன்பத்தை நம்முடைய முயற்சியால் குறைத்துக் கொள்ள வழி இருக்கிறது. அதேபோல மழை - வெய்யில் இந்த நேரத்தில் வெளியில் செல்லாமல் இருந்து விட்டாலோ, அந்த மழையினாலோ வெய்யினாலோ ஏற்படும் துன்பம் அப்பொழுது நமக்கு ஏற்படுவதில்லை. அதுவும் நமது முயற்சியே.

இதேபோல், அதிக துன்பத்தை வரவழைத்துக் கொள்வதும் நம்முடைய முயற்சியே. நல்ல மழையிலும் - வெய்யிலிலும் தடுப்பு சாதனங்கள் போன்ற Rain Coat - ஒன்றுமில்லாமல், காலுக்கும் ஒன்றும் அணிந்து கொள்ளாமல், "இந்த மழை என்ன செய்துவிட முடியும் - இந்த வெய்யில் என்ன செய்துவிட முடியும்" என்று சொல்லிக்கொண்டே வெளியில் போனால் அதன் பலன் அப்பொழுதும் அனுபவிக்க நேரிடும், பின்னரும் அனுபவிக்க நேரிடும், ஆகவே மழை வருவதோ - வெய்யில் காய்வதோ தவிர்க்க முடியாதது; அதனால் வரும் சுகதுக்கங்களைக் குறைத்துக் கொள்ளவோ - அதிகப்படுத்திக் கொள்ளவோ மனிதனுடைய முயற்சி உபயோகமாகிறது.

உதாரணமாக ரேடியோ பாடுவதற்கும் - மின் விசிறி காற்று வீசுவதற்கும் - மைக் பேசுவதற்கும் - தொழிற் சாலை முதலியன இயங்குவதற்கும் மின்சாரம் பொது வான காரணமாகிறது. ஆனால் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி Switch முறை Volume மாற்றங்கள் முதலிய வைகளெல்லாம் தனியாக இருக்கின்றன. இவைகளை உபயோகப்படுத்துவது மனிதனின் முயற்சி ஆகவே ஆண்டவன் உலகம் இயங்குவதற்குப் பொதுவான

காரணமாக இருந்தாலும், உலகிலுள்ள மக்களுக்குச் சுக துக்கங்கள் ஏற்படுவதற்குக் காரணம்; அவர்களுடைய கடமைகளை - செய்கைகளே - கர்மாக்களே! ஆகவே உலகிலுள்ளவர்கள் எல்லோருமே சௌக்கியமாக இருப்பதற்கு அவரவர்களுக்குள்ள கடமைகளை - கர்மாக்களைச் சரியாக செய்துவர வேண்டும்.

## 9. யுக தர்மங்கள்

கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆக நான்கு யுகங்கள். ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு யுககர்மம் உண்டு. அந்த யுக தர்மத்துக்கேற்றவாறு மக்களுடைய (பழக்கவழக்கங்கள்) எல்லாமே வருகின்றன. கிருதயுகத்தில், தர்மங்கள் முதலியவை களெல்லாம் பரிபூர்ணமாக நிறைந்து மக்களுடைய பழக்க வழக்கங்களிலேயே இருந்து வருகின்றன. மனிதனுடைய ஆயுள் பாவமும் ஆயிரக்கணக்கான வருடங்கள் இருந்தன. அவர்களுடைய புத்தி - சக்தியும் ஒருமுறை ஒருவிஷயத்தைக் கேட்டுவிட்டால், அது மனத்தில் நன்றாகப் பதிந்து விடும் நிலைமையிலும் - அல்லது யூகித்துத் தெரிந்துகொள்ளக்கூடிய சக்தி உடையவர்களாயும் இருந்தார்கள். ஆகாரங்களிலும், ஆண்டுக்கணக்காக உபவாசமாக இருப்பதிலும் சக்தி பெற்றவர்களாக இருந்தார்கள். அவர்களைக் கொன் றாலும் அவர்கள் சரீரத்தில் எதுவரையில் இருக்கிறதோ அதுகால பரியந்தம் அவர்கள் உயிர் இருந்து வந்தது. அநேகமாக கிருத யுகத்தில் யாரும் தப்புக் காரியங்கள் செய்ய மாட்டார்கள். இல்லறத்தில் வாழ்ந்தாலும் அவர்களெல்லாம் ஞானிகளாகவோ - மஹா புருஷர் களாகவோ இருந்துவிட்டுச் சென்றார்கள். அரசாங்

கமும், அரசர்களும் இருந்தாலும் அவர்களும் இதே மாதிரியாகவே இருந்து வந்தார்கள்.

அடுத்து வந்த திரேதா யுகத்தில் சொல்லப் பட்டவைகளிலிருந்து ஒரு பாகம் குறைந்து விட்டது. துவாபரயுகத்தில் சரிபாதி கிருதயுகத் தர்மங்கள் குறைந்துவிட்டன. கிருத யுகத்தில் சொல்லப்பட்ட தர்மங்களில் மூன்று பாகங்கள் கலியுகத்தில் குறைந்து விட்டன; ஒரு பாகமே பாக்கியுள்ளது. அதுவும் பெயரளவில் இருந்துவருகிறது.

நூறு வயதிற்குமேல் ஒருவனுக்கு வயது இருந்து விட்டால். அது விஷயம் பேப்பரில் வருகிறது - ஒரு நாளைக்குமேல் ஒருவன் உபவாசம் இருந்துவிட்டால் அதுவும் பேப்பரில் வருகிறது ஆச்சரியமாக இருக்கிறது. சாமான்ய லௌகீக வித்தையில் தோல்வியுறாமல் ஒருவன் முதல்தரமாக பாஸாகிவிட்டால் அவன் பெயர் பேப்பரில் வருகிறது. ஆகவே கலியுகத்தில் புத்தி, உணவு உண்ணும் சக்தி எல்லாமே மிகவும் குறைவாகவே இருக்கிறது. இதேபோலத்தான் தர்மத்தைக் கடைப் பிடிக்கும் விஷயத்திலும், சிரத்தை முதலியவைகள் குறைந்து வருகின்றன. இருந்த போதிலும் கலியுக தர்மப்பிரகாரம், இறைவனுடைய அருளைப் பெறுவதற்கு முன் யுகங்களைப்போல பெரிய தவம், உபவாசம் முதலியவைகளைப் போன்ற காரியங்கள் - செய்கைகள் செய்யத் தேவையில்லை.

நமது கடமையோடு கூட பகவானிடம் பக்தி ஸ்தோத்திரங்கள் படிப்பது - பூஜை முதலியவைகள் செய்வது போன்ற காரியங்கள் செய்துவந்தால் போதும் இறைவன் அருள் சுலபமாகக் கிட்டும். யுகதர்மப்

பிரகாரம்தான் உலகம் நடைபெறுமென்ற எண்ணத்துடன் எந்த நல்ல காரியத்திற்கும் முயற்சி செய்யாமல் இருந்து விடக்கூடாது; வியாதி வரப்போகிறது அல்லது வந்துவிட்டது என்று தெரிந்தவுடன் அதை போக்கடித்துக் கொள்வதற்கு நாம் எவ்வளவு முயற்சி செய்கிறோமோ அவ்வளவு முயற்சியும் செய்தே ஆக வேண்டும்.

## 10. காலக் கணக்குகள்

உலகில் வரலாற்று ஆசிரியர்கள் உலகம் தோன்றி எத்தனை ஆண்டுகள் ஆயிற்றென்று நிச்சயமாக கூற முடியாமல் 25,000 - 50,000 என்று ஏதோ கணக்கிட்டுச் சொல்லி வருகிறார்கள். ஆனால், நமது ஹிந்து மதப் பிரகாரம், ஹிந்து மத நூல்களில் காலக் கணக்கு இவ்விதம் சொல்லப்படுகிறது.

ஒருநாள் - அதாவது அறுபது நாழிகைகள் கொண்டது.

15 நாட்கள் - ஒரு பக்ஷம் எனப்படும்

30 நாட்கள் - ஒரு மாதம் அதாவது இரண்டு பக்ஷங்கள்.

6 மாதம் - ஒரு அயனம்.

2 அயனங்கள் - ஒரு வருஷ 8 அதாவது 12 மாதங்கள்

உத்தராயனம் - ஆறு மாதங்கள். அது தேவதைகளுக்கு ஒரு பகல்.

தக்ஷிணாயனம் - ஆறுமாதங்கள். அது தேவதைகளுக்கு இரு இரவு.

12 மாதங்கள் - ஒரு மனித வருஷம். அது தேவதைகளுக்கு ஒருநாள்.

அப்படி 360 மனித வருஷங்கள் கொண்டது ஒரு தேவ வருஷம் 12,000 தேவ வருஷங்கள் கொண்டது ஒரு சதுர்யுகம். 12,000 360 மனித வருஷங்கள். அதாவது 43,20,000 வருஷயங்களைக் கொண்டது சதுர்யுகம் எனப்படும்.

அதில்

| | | |
|---|---|---|
| கலியுகம் | 4,32,000 | மனித வருஷங்கள் |
| துவாபரயுகம் | 8,64,000 | " |
| த்ரேதாயுகம் | 12,96,000 | " |
| க்ருதயுகம் | 17,28,000 | " |

இப்படி நாலு யுகங்களில் மொத்த மனித வருஷங்கள் சேர்ந்தே 43,20,000 வருஷங்கள். அதுவே ஒரு சதுர்யுகம் என அழைக்கப்படும்; அப்படி 1000 சதுர்யுகம் பிரம்மாவுக்கு ஒரு பகல் அதாவது 4,32,00,00,000 மனித வருஷங்கள். அதே மாதிரி 1000 சதுர்யுகம் கொண்டது பிரம்மாவின் ஓர் இரவு ஆக 8,64,00,00,000 மனித வருஷங்கள் என்பத 2000 சதுர்யுகம், அதுதான் பிரம்மாவுக்கு ஒருநாள். 8,64,00,00,000 மனித வருடங்கள். ஆகவே 1000 சதுர்யுகம்.

ஒரு மன்வந்திரம் என்றால் 713/7 சதுர்யுகங்களைக் கொண்டதே - விஷ்ணு புராணப்படி 30,67,20,000 மனித வருஷங்களைக் கொண்டது.

713/7 சதுர்யுகம் என்றால் 71 சதுர்யுகங்களும் 5103 தேவ வருஷங்களையும் உள்ளடக்கியதே ஒரு மன்வந்திரம். அப்படி 14 மன்வந்திரங்கள் பிரம்மாவின் ஒரு பகலில் வந்து போகின்றன.

ஒரு பிரம்மாவின் வயது ஏழு கல்பங்களைக் கொண்டது. ஒருபரம் அதாவது, 1,57,68,000 கோடி மனுஷ வருஷங்களைக் கொண்டது.

## 11. ஹிந்து சமயத்தின் விசேஷ அடையாளங்கள்

ஒவ்வொரு மதத்திற்கும் ஒவ்வொரு மத அடையாளச் சின்னம் உண்டு. உதாரணமாக கிருஸ்துவ மதத்திற்குச் சிலுவையும் முஸ்லிம் மதத்திற்கு நட்சத்திரமும், பிறைச் சந்திரனும் இருப்பது போல், ஹிந்து மதத்திற்குச் சில விசேஷ சின்னங்கள் இருக்கின்றன.

1. நெற்றியில் விபூதி - குங்குமம் - கோபி - சந்தனம் - திருமண் போன்றவைகளை இட்டுக் கொள்ளுதல் அல்லது இட்டுக் கொள்வதை ஒப்புக்கொள்ளுதல்.

2. வஸ்திரத்தை கச்சமாக அணிந்துகொள்ளுதல் அல்லது அங்கீகரித்தல்.

3. குடுமி வைத்துக் கொள்ளுதல் - அல்லது குடுமி வைத்துக் கொள்வதை அங்கீகரித்தல்.

4. வேத புஸ்தகம் படித்தல் அல்லது வேத கருத்துகளை அங்கீகரித்தல்.

5. பிறந்தது முதல் இறப்பு வரை அக்னி சாக்ஷியாகக் காரியங்களைச் செய்தல் அல்லது அக்னி வழிபாட்டு முறையை அங்கீகரித்தல்.

6. இறைவனை நிர்குண - சகுண - சாகார - அவதார வடிவங்களாக அங்கீகரித்தல்.

7. முன் பிறவி, மறு பிறவியை ஏற்றுக் கொள்ளுதல்.

8. நாம் அனுபவிக்கும் சுகதுக்கங்களுக்கு, நம்முடைய வினையே என்று சொல்லப்படும் கர்ம சித்தாந்தத்தை அங்கீகரித்தல்.

9. பூலோகம் தவிர மற்ற உலகங்களும் உண்டு என்ற கொள்கையை அங்கீகரித்தல்.

10. இறந்தவர்களுக்கு அவ்வப்போது விசேஷமாக வழிபாடு செய்வது அல்லது வழிபாடு செய்வதை அங்கீகரித்தல்.

11. வேறுபாடுள்ள சமுதாயத்தில் ஒற்றுமையைக் கடைப்பிடித்தால் வேறுபாடுள்ள கடவுள் வழிபாட்டில் ஒரே கடவுளைக் காணுதல்.

12. மலைகள் - நதிகள் - குளங்கள் போன்ற இடங்களிலும் புனிதத் தன்மையைக் கண்டு நீராடி வழிபடுதல் அல்லது ஏற்றுக் கொள்ளுதல்.

## 1. அன்னிய அரசாட்சியின் முடிவு நம் முடியை நாம் ஏற்பதே.

அன்னிய அரசாங்கம் தலை மறைந்து கொண்டிருக்கிறது. அன்னிய அரசாங்கப் பட்டங்களை நம்மவர்கள் துறந்துகொண்டிருக்கிறார்கள். அன்னிய பாஷையின் மதிப்பையும் இறக்கிக் கொண்டிருக்கிறார்கள். அன்னிய ஆட்சி காலத்தில், அன்னிய மோகத்தால், நம்மைப் பிடித்த பேய்கள் எல்லாவற்றிலும் தலையை மிதித்துக் கொண்டிருக்கும் மிகவும் முரடான பேய், அன்னிய அனுஷ்டானப் பேயே. பட்டங்களும் பாஷையும் போவதால் மாத்திரம் உண்மையில் அன்னியப்பேய் அகன்றுவிடவில்லை. அன்னிய மோகத்தை நாம் பாராட்டிக் கொண்டிருப்பது அன்னிய அனுஷ்டானங்களாலேயே. அவைகளில் ஒன்றை இங்கு ஆலோசிப்போம்.

நிஜாம் ராஜ்யத்தில் முகம்மதியர் ஆட்சியில் அகப்பட்டுக் கொண்ட நம்மவர்கள் நம் நாட்டுத் தலையணியை விட்டு, குஞ்சம்கட்டிய துருக்கித் தோப்பியை அணிந்து, அவன் நாகரிகத்தை வேஷம் கட்டி ஆடுகிறார்கள். நிஜாம் ஹிந்து ப்ரஜை அன்னிய நாகரிகத்தின் தொப்பி போட்டு திருப்தி செய்து வைப்பதோடு நிற்கிறான். வெள்ளையர் ப்ரஜைகளாயிருந்த நாமோ தொப்பிக்குக்கீழ் உள்ள நம் தேகத்தில் உள்ள ஒரு அம்சத்தை அன்னிய நாகரிகத்திற்குப் பறி கொடுத்துவிட்டோம். அன்னிய நாகரிகத்தைத் தலையார வாழ்த்துகிறோம்.

சிகையைப் பறிகொடுத்து விட்டோம். அன்னிய நாகரிகப்பேய் நம் தேகத்திலேயே ஒரு பாகமாய்விட்டது.

இந்தப் பேயை விரட்டினாலொழிய அன்னிய ஆட்சியின் அடிமைத்தனம் உண்மையாய்ப் போனதாக ஆகாது. இன்னமுமா 'கிறாப்' என்று தீரமாக ஆலோசியுங்கள். நீங்களே ஒரு முடிவுக்கு வாருங்கள். பாரதமாதா உண்மை ஸ்வதந்திரத்தை அடையட்டும். அவள் உங்கள் மனதில் புகுந்து ஸ்வதர்மம் என்னும் உண்மை ஸ்வதந்திரத்தைப் புகட்டி, கடைசிப்பேய் விரட்டப்படட்டும்.

இனி எந்த ஹிந்து மதஸ்தனும் தன்மதிப்பையும் தன் தர்மத்தையும் விட்டுப் பிறனைப் பார்த்துக் காபி அடிக்கும் வீண் துர்பாக்கியத்தை அடைய வேண்டாம்.

## சிகையை ஏன் எடுக்கக் கூடாது?

1. முடிந்த சிகையுடன் செய்யவேண்டிய சுப கர்மானுஷ்டானங்களும், அவிழ்ந்த சிகையுடன் செய்ய வேண்டிய அசுபகர்மானுஷ்டானங்களும் வீணாகாமலிருப்பதற்காக.

2. இறந்த உறவினர்களுடைய சாவு தீட்டுகளை யெல்லாம் ஒருங்கே சேமித்து வைத்துக் கொள்ளாமல் இருப்பதற்காக விதிமுறைப்படி க்ஷவரமும் தர்ப்பணமும் செய்தாலொழிய தீட்டு அகலாது.

3. வேதமந்த்ர பூர்வம் தெய்வ ஸாக்ஷியாகச் சௌகர்மாவில் வைக்கப்பட்ட சிகையைத் திரும்பவும் வேத மந்திர பூர்வமாக ஸன்யாஸ ஸமயத்திலேயே எடுக்கவேண்டியிருக்க, இடையே இஷ்டப்படி எடுத்து விடுவதால் வேத துரோகமும், தெய்வ துரோகமும் ஏற்படாமலிருக்க.

4. ஒரு மனிதன் ஸ்னானம் செய்தவுடன் அவன் மேல்வஸ்திரத்தைப் பிழிந்த ஜலமும், சிகையின் நுனியின் மூலமாய்க் கீழே விட்ட ஜலமுமே அவனுடைய வம்சத்தில் பிறந்த முன்னோர்களில் யாரேனும் அதிக பாதகங்கள் செய்து நரகத்தில் இருந்தால் அவர்களைப் போய்ச் சேரும் தர்ப்பண ஜலமாகிறது. ஆதலால் அவர்களுக்குக் கொஞ்சமேனும் ஏற்படும் ஆறுதலையும் கொடுக்காமலிருப்பதற்காக.

5. கடைசியாக மேனாட்டு நாகரிகத்தைத் தலையார வாழ்த்தாமலிருப்பதற்காக.

## 2. நமது மதத்தில் அதிக நியமங்கள் எதனால்?

வினா : - ஈசனுடைய அரசாங்கத்தில் அதிகாரிகள் யாவர்?

விடை : - முப்பது கோடி தேவர்களும் பித்ருக்களும்.

வினா : - அவர்கள் இருப்பிடம் யாது?

விடை:- முறையே வடக்கில் உள்ள தேவலோகமும், தெற்கு திக்கில் உள்ள பித்ரு லோகமும் என்று மறைகள் கூறுகின்றன.

வினா : - இவ்வீசனது அரசாங்கத்திற்கு நாம் செலுத்தும் வரி யாது?

விடை : -தேவர் கடனும், பித்ரு கடனும்.

வினா : - நம்மையெல்லாம் காப்பதற்காக அவ்வதிகாரிகளுக்கு எதை ஜீவனமாக ஏற்படுத்தி யிருக்கிறார்?

விடை : - தேவ யக்ஞங்களும், பித்ரு யக்ஞங்களுமே, திருவள்ளுவ நாயனாரும் திருக்குறளில்.

'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
ஐம்புலத்தா றோம்பல் தலை.'

என்று கிருஹஸ்தாச்ரமத்தைக் கூறுமிடத்துச் சொல்லியிருக்கிறார்.

வினா : - தென்புலத்தார் என்றால் யார்?

விடை : - தெற்கு திக்கில் உள்ள லோகத்தில் இருக்கும் பித்ருக்கள். ஆதலால்தான் வேதியர்கள் பித்ரு சடங்குகளைச் செய்யும் பொழுது தென்தோளான் வலது தோளில் பூணூலைப் போட்டுக் கொள் வதையும், ஸந்த்யாவந்தனம், யாகம் முதலிய தெய்வச் சடங்கு களைச் செய்யும் பொழுது அதனை வடதோளாகிய இடது தோளில் போட்டுக் கொள்வதையும் பார்க்கிறோம்.

வினா : - லோக பொது க்ஷேமத்தின் பொருட்டு ஒவ்வொரு குலத்தோரும் செய்யவேண்டிய கடமைகளில் வேதியர்கள் செய்யவேண்டிய கடமை எது?

விடை : -வேதமோதி, வெகு நியமத்துடன் மந்த்ர சக்தியை ரக்ஷித்து, உலகத்தில் உள்ள எல்லா ப்ராணிகளுக்கும் ப்ரதிநிதியாக ஈச்வரனால் அதிகாரம் கொடுக்கப்பட்ட இந்திரன், வருணன், வாயு, அக்னி முதலிய தேவர்களுக்குச் செலுத்தவேண்டிய கடமை களைச் செலுத்தி, உலகத்திற்கு ஈசனது அருளைப் பெறுவிப்பதே. வருணங்களிலும் மற்ற அனுலோம, ப்ரதிலோம குலங்களில் பிறந்த மக்களுக்குக் கைத்தொழில்கள், வியாபாரம், விவசாயம், அரசு முதலிய

உலகவியல்பான காரியங்களில் விசேஷமாக ஈடுபட்டுச் செய்யுமாறு அறநூல் குறிப்பிடுவது போல், மந்த்ர சக்தியை முக்கிய காரியமாகக் கொண்டு, ஈசனது அரசாங்கத்திற்கு வரிக் கொப்பான தெய்வ கர்மங்கள், பித்ரு கர்மங்கள் என்ற கடமைகளைச் செலுத்தி, பிரபஞ்சம் முழுவதிற்கும் தொண்டு புரிவதையே வேதியர்களின் விசேஷமான கடமையாக அறநூல்கள் குறிப்பிடு கின்றன.

வினா : - இக்கடமைகள் உலகினில் சரிவர நடை பெறாவிடில் என்ன ஏற்படும்?

விடை : -அரசாங்கத்திற்கு வரி கொடாப் பிரஜை களின் கதியே உலகத்திற்கு ஏற்படும். ஆகையால் தான் இக்காலத்தில் அக்ரம யுத்தங்களும், வியாதி களும், நாசங்களும், பஞ்சங்களும் இன்னும் மனித சக்திக்கு அடங்காத அநேகவிதமான கஷ்டங்களும் மலிகின்றன.

வினா : - வேதியர்கள் செய்யவேண்டிய தெய்வச் சடங்குகள் யாருடைய க்ஷேமத்திற்காக?

விடை : - உலகத்திலுள்ள ஈ, எறும்பு, எல்லாச் சமயங் களையும் சேர்ந்த மாந்தர்கள் உள்பட எல்லாப் பிராணிகளுடைய க்ஷேமத்திற்காகத்தான்.

வினா : - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பதிகத்திலிருந்து கூறப்பட்ட பரித காக்கையர், பாயுடுக்கையர் என்னும் பாசுரத்தில் உள்ள மறை வழக்கம் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

விடை : - வேதத்தின் கர்ம காண்டத்தில் ஆசாரம், அனுஷ்டானம் என்ற இரு வகைப்பட்ட தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஆசாரமாவது

தனது உடலுக்கும் மனதுக்கும் தெய்வீகமான சுத்தியைத் தரும் நடத்தை. அனுஷ்டானமாவது வேத விதிப்படி தேவர்கள், பித்ருக்கள், மாதா, பிதா, ஆசார்யன், பெரியோர், அதிதிகள் இவர்களுக்கு நடத்தப்பட வேண்டிய சடங்குகள். தமிழ் அற நூல்கள் ஆசாரத்தை ஒழுக்கம் என்றும் அனுஷ்டானத்தை வழக்கம் என்றும் சொல்லும். ஆதலால் மறை வழக்கம் என்பதே வைதிக அனுஷ்டானம் என்று பொருள்படும்.

வினா : - ஒருவன் வேதத்தின் ஆணையான தெய்வ பித்ரு கர்மங்களைச் செய்யாது, வேண்டுமென்றே மீறி, ஈசனிடத்தில் மாத்திரம் பக்தி செய்கிறேன், என்று சொன்னால் அவன் கதி யாது?

விடை : - தன் கட்டளையைச் செய்யாது மீறி நடந்து தன்னை மாத்திரம் ஸ்துதி செய்யும் தன் வேலைக்காரனை ஓர் அரசன் எப்படி நடத்துவானோ அதே கதிதான் இவனுக்கும்.

வினா : - வேதத்தால் விதிக்கப்பட்ட கடமை களைச் செய்யாது, ஈசனிடம் ஞானம், பக்திகளை மாத்திரம் யாராவது செய்யலாமா?

விடை : - செய்யலாம்.

வினா : - எவன் செய்யலாம்?

விடை : - துறவி.

வினா : - அவன் மாத்திரம் எப்படி இக்கடமைகளை விட்டு விடலாம்?

விடை : - நம் நாட்டுப் பிரஜைகளில், வீடு வேண்டும்

என்பவன் வீட்டு வரி செலுத்தவேண்டும். நிலம் வேண்டும் என்பவன் நில வரி செலுத்த வேண்டும். வட்டி, லாபம் வேண்டும் என்பவன் வருமான வரி செலுத்தவேண்டும். வீடு, நிலம், வட்டி, லாபம் ஒன்றும் வேண்டாம் என்று ராஜினாமா கொடுத்து விட்டவன் ஒரு வரியும் கொடாமலேயே அதிகாரிகளிடம் போய், நிர்பயமாய் உட்காரலாம். அது போலவே இல் வாழ்வான தனக்கும் தன்னை அண்டினவர்களுக்கும் நிழல் வேண்டும், பொருள் வேண்டும், ஸூர்யனது வெப்பம் வேண்டும், அக்னியினது உஷ்ணம் வேண்டும், வருணனது நீர் வேண்டும், இலை வேண்டும், காய்கறி வேண்டும் என்னும் அபேக்ஷைகள் இருக்கும் வரையில் தேவர் கடனைச் செலுத்தியே ஆகவேண்டும். இவ்வுலகிலுள்ள மாந்தர்களால் ஒரு வாழை இலையாவது, தான்யத்தையாவது எவ்வளவு ரஸாயன விஞ்ஞானிகள் சேர்ந்தாலும் சிருஷ்டித்து விடமுடியாது. ஒரு முனிசிபாலிடியில் இருப்பதற்காக முனிசிபல் வரியும், ஒரு ஜில்லாவில் வசிப்பதற்காக ஜில்லா போர்டு வரியும், ஒரு நாட்டில் வசிப்பதற்காக அரசாங்க வரியும் செலுத்துவது போலவே, இப்பிரபஞ்சத்தில் நாம் வசிப்பதற்காக தேவர் கடமையையும் செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம். இதுவே ஹிந்து மதம் என்னும் வேத நெறியின் சிறப்பான கொள்கை. பரமஹம்ஸ ஸந்யாஸியோ தனக்கு வீடும் வேண்டாம்; குழந்தைகளும் வேண்டாம்; பந்துக்களும் வேண்டாம்; உணவு கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் தான் வாங்கிக் கொள்வதில்லை; உடல் இருந்தாலும் விழுந்தாலும் தான் கவலைப் படுவதில்லை; ஓர் இலையையும் கிள்ளுவதில்லை; என்று எல்லாவற்றையும் துறந்துவிட்டபடியால், அவன் தேவர்களுக்கோ,

பித்ருகளுக்கோ செலுத்தவேண்டிய கடமை ஒன்றுமே இல்லை. ஈசனிடம் ஒன்றுபடுவதற்கு நிஷ்டை செய்வதைத் தவிர வேறு கடமை இல்லை. அவன் செய்யும் உலக ஸேவையும் அதுவேதான். அல்லும் பகலும் இறைவனையே நாடி, வேறு ஆசையையும் மறந்து, ஈசன் அருளைப் பெற்றவன் ஒருவன் இவ்வுலகில் இருந்தனேயானால் அவனது தர்சனத்தினால் உலகி லுள்ள மாந்தர் அடையும் நன்மையே பொருள் முதலிய எல்லாவற்றையும் விட மேலானது, ஆதலால்தான் பரமஹம்ஸ ஸன்யாசி தேவயக்ஞத்துக்கும் அவச்யமான யக்ஞோபவீதம், ப்ராசீனாவீதம் என்னும் பூணுலையும், சிகை என்னும் குடுமியையும், பஞ்சகச்சம் என்னும் ஆடை உடுக்கும் விதியையும் துறந்து, தன் ஆசையும் அதற்குரிய கடமையும் முடிந்தது என்ற நிலையை அடைகிறான்.

விசேஷமான பித்ரு கர்மங்களில் சிகையிலும் கச்சத்திலும், வேதவிதிப்படி தெய்வ கர்மத்தைக் காட்டிலும் சில மாறுபாடுகள் உள்ளன.

வினா : - கிருஹஸ்தாச்ரமி ஏன் சிகை, கச்சம், உபவீதம் இவைகளைத் தரிக்கவேண்டும்?

விடை : - வேத விதிப்படி இவைகள் மூன்றும் தெய்வ பித்ரு கர்மங்களுக்குச் சாதனமாதலால் தான்.

வினா : - தெய்வ பித்ருகர்மங்களை அவன் ஏன் செய்ய வேண்டும்?

விடை : - நீர், வெப்பம், நிழல், உணவு, குழந்தை, பெண்டிர் முதலியன வேண்டுமென்ற ஆசையிருப்பதால்.

வினா : - இவைகளுக்காக தேவர்கடன் செய்வானேன்?

விடை : - இப்பொருள்களில் ஒன்றையேனும் மனிதன் செய்ய முடியாது. மனித சக்திக்கும் எட்டாத தேவசக்தியினால் ச்ருஷ்டிக்கப் பட்ட பொருள்களை நாம் அனுபவித்துக்கொண்டு ப்ரபஞ்ச அரசாங்கத்தின் வேதசட்டப்படி அவைகளுக்குக் கைம்மாறான கடமைகளை நாம் செலுத்தாவிடின் நாம் திருடர்கள் ஆவோம். இதையே ஸ்ரீ க்ருஷ்ணபகவான் பகவத்கீதையில் 3-ம் அத்யாயம், 12-வது ச்லோகத்தில்,

"யக்ஞங்களால் ஆராதிக்கப்பட்ட தேவர்கள் திருப்தி அடைந்து, காற்று, வெப்பம், நீர், செடி, கொடி முதலியவற்றின் மூலமாக மாந்தர்களுக்கு இஷ்டமான போக சுகங்களைக் கொடுக்கின்றார்கள். அப்படி அவர்களால் தரப்பட்ட வஸ்துக்களில் அவர்களுக்கு உரிமையானவைகளைச் செலுத்தாமல் தான் மட்டும் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறவன் திருடனாகவே ஆகிறான்," என்று கூறியிருக்கிறார். மற்றும் பகவான் ஷை அத்தியாயம் 10, 11 -வது ச்லோகங்களில் :- ஆதியில் சிருஷ்டிகாலத்தில் பகவான் யக்ஞத்தோடுகூடவே உலகமாந்தர்களை சிருஷ்டித்தார். பிறகு மாந்தர்களை நோக்கி இவ்விதம் கூறலானார்:-

"இந்த யக்ஞத்தைக்கொண்டு நீங்கள் அபிவிருத்தியை அடையுங்கள். உங்கள் அபிவிருத்திக்காக நீங்கள் வேண்டும் பொருள்களை யெல்லாம் உங்களுக்கு ஓர் காமதேனுவாய் நின்று இது கொடுக்கட்டும். இந்த யக்ஞத்தைக்கொண்டு தேவர்களுக்கு க்ஷேமகரமான காரியங்கள்ளச் செய்து வைப்பீர்களாக. அவர்கள் (நீர், வெப்பம் முதலியவற்றால்) உங்களுக்கு க்ஷேமகரமான

காரியங்களைச் செய்து வைப்பார்களாக. (இவ்விதம் ஓர் நல்ல அரசனுடைய அதிகாரிகளும், பிரஜைகளும் போலப் பரஸ்பரம் க்ஷேமகரமான காரியங்களைச் செய்துகொண்டு கிரமமாக ஈசனை அணுகுதல் என்பதீறாக உள்ள) பெரும் பேற்றை அடையுங்கள்" என்று கூறியிருக்கிறார்.

தெய்வ கர்மங்களுக்கு வேதவிதிப்படி அவச்யமான மந்த்ர சக்தியும் ஆகார ஆசார சுத்தியும் கொஞ்சமாவது நிலைத்திருப்பதற்காகவே, உடலில் காம உணர்ச்சி உதிப்பதற்கு முற்காலமாகிய எட்டு வயதிலேயே கிரமமாக வர்ணாச்ரம தர்மங்கள் ஆரம்பிக்கப்பட்டு விதிக்கப் பட்டிருக்கின்றன. பித்ரு கர்மங்களுக்கு ஆதாரமான வம்ச சுத்திக்காகவே கன்னிப்பருவத்திலேயே மணத்தல், விதவைகள் விசேஷ நியமத்தோடு இருத்தல் முதலியன சிறப்பாக நமது வேதநெறியில் விதிக்கப் பட்டிருக்கின்றன. எந்தக் கஜானாவில் சட்ட முறைப்படி எதைச் செலுத்தினாலும், அது அரசனுக்கே உரித்தாவது போல், எத்தேவர்கட்கோ, எப்பித்ருகளுக்கோ, எப் பெரியோருக்கோ வேத நெறிப்படி அர்ப்பணம் செய்யினும் அது எல்லாம் வல்ல ஈசனுக்குத் திருப்பணியே.

வேதவிதிப்படி அந்தணர் நியமத்துடன் ஓதிய மந்த்ரத்தைக்கொண்டு வானவரைக்குறித்து முக்கியமாய் "ஆ"வின்பால், நெய், முதலிய த்ரவ்யங்களை ஹோமம் செய்தலென்னும் யக்ஞத்தினால் உலக சாம்ராஜ்யம் செழிக்கும். "ஹரஹரமகாதேவ" என்ற அரன் புகழ் ஒலிக்கும், ஆதலால் வேதநெறிப்படி ஒழுகும் அந்தணரை யும், வேள்விக்காம் அவிநெய் பெய்யும் ஆவினத்தையும் குறித்தே ஸ்ரீ குமாரக் கடவுளின் அம்சமாகிய

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் கீழ்வருமாறு வாழ்த்துப்பதிகம் பாடியருளியிருக்கின்றார்.

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேதனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

# ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களது உபதேசங்கள்

1. நல்லோருடன் பழகவும்.
2. இறைவனிடம் பக்தி கொள்ளவும்.
3. மன அமைதியும் அடக்கமும் பழகத்தக்கது.
4. வைதிகத்தில் நம்பிக்கையுடன் ஆராய்ந்தறியவும்.
5. பசியும் நோயே. அளவுடன் உணவேற்கவும்.
6. கிடைத்ததில் மனநிறைவு பெறவும்.
7. தூய மனம் உள்ளவனே தூயவன்.
8. தனக்கும் பிறருக்கும் இதமாக நடப்பதே பிறவியின் முக்கிய நோக்கம்.
9. முயற்சியின்றி சோம்பித்திரிபவன் பெரும் எதிரி.
10. பொருள் நாட்டமிக்கவன் குருடனை விட மட்டமானவன்.
11. பிறரிடம் யாசியா திருப்பதே பெருமையின் ஆதாரம்.
12. தாழ்ந்தவனிடமும் யாசித்து விரும்பியதைப் பெறுவதே தாழ்வின் எல்லை.
13. எதிலும் சந்தோஷமின்மையே (மனம் நிறைவு பெறாதிருப்பதே) பெரும் துயரம்.
14. பகுத்தறிபவனே விழித்திருப்பவன்.
15. வாலிபமும் செல்வமும் ஆயுளும் நிலையில்லாதவை - தாமரை இலை மீதுள்ள நீர்த்துளி போல்.

---

1-6 உபதேச பஞ்சகம்

16. பிறருக்கு அடிமையாயிருப்பதே கொடும் நரகம்.

17. அன்புடன் உயிரினத்திற்கு இதமாயிருப்பதே ஸத்தியம்.

18. தியாகபுத்தி ஒன்றே துயரமனைத்தையும் போக்கவல்லது.

19. நெருக்கடியில் உதவுவதே விலைமதிப்பற்றது.

20. மறைவில் பிறரறியார் என்ற எண்ணத்துடன் செய்கிற தீவினை மரணம் வரை உள்ளத்தை ஊவா முள் போன்று குத்தும்.

21. கல்வி கற்பதிலும் நோய் நீக்குவதிலும் பிறருக்கு உதவுவதிலும் எப்போதும் முயற்சி அவசியம்.

22. மனம் கவர்வதை நாட வேண்டாம்.

23. பாபச் செயலைச் செய்ய வேண்டாம்.

24. எளியவர்களிடம் கருணையும் நல்லோருடன் நட்பும் விரும்பத் தக்கவை.

25. ஸத்யமும் சகிப்புத் தன்மையும் உள்ளவன் உலகை வெல்வான்.

26. அடக்கத்துடன் பிரியத்துடன் உண்மை பேசுபவனிடம் உலகம் வசப்படும்.

27. செய்யத்தகாததைச் செய்பவன் குருடன். இதமாக எடுத்துக் கூறப்பெறுவதைக் கேட்காதவன் செவிடன். உரிய நேரத்தில் சொல்ல வேண்டியதை அன்புடன் சொல்லாதவன் ஊமை.

---

*7-21, 22-47 பிரச்நோத்த ரத்னமாலா. 22-23 உபதேச பஞ்சகம்.*

28. தவறான பாதையில் செல்பவனைத் தடுப்பவனே நண்பன்.

29. கொடையும் அன்பு மொழியும் செருக்கற்ற அறிவும் பிறர் பிழையை பொறுத்துப் பரிவு காட்டுகிற சூரத்தன்மையும் நான்கு மங்களமான பண்புகள் (சதுர்பத்ரமெனப் பெரியோர் இவற்றைப் புகழ்வர்)

30. அடங்கி வழியில் நிற்பவனே மதிக்கப் பெறுவான்.

31. அன்புடன் இதமாகப் பேசி அறவழியில் நிற்பவனின் வசத்தில் இவ்வுலகம் அடங்கி நிற்கும்.

32. பெரியோர் சொல்லை மதித்துப் புலனடக்கத்துடன் செயல்படுபவனைக் கேடு அணுகாது.

33. சோம்பலின்றி நேர்மையுடன் நடப்பவனை செல்வத்தின் தேவதையான லக்ஷ்மி விரும்பி அடைவாள்.

34. வஞ்சகனும் பேராசை மிக்க ஆட்சியாளனும் இருக்குமிடத்தில் வசிக்காதே.

35. பிறரைப் பற்றிய அவதூறையும் பொய்யையும் சொல்லாதே.

36. குல வழக்கத்தைப்பின் பற்றுவதும் நல்லோரிணக் கமும் உயிரினும் மேம்பட்டது.

37. நல்ல மாணவனின் மனத்தில் பதித்த கல்வியே கற்பகக்கொடி.

38. செல்வமிருந்தும் சமயத்தில் அதனை வழங்காதவன் வருந்தத்தக்கவன்.

39. கடன் பெறுவதே மனிதனின் தூய்மையைக் கெடுக்கும்.

40. மக்களின் பாராட்டைப்பெற்றவன் கெட்ட பெயர் பெற நேர்ந்தால் அந்நிலை மரணத்தைவிடக் கொடிது.

41. அடிக்கடி உண்மையற்றதைக் கூறுபவனை உலகம் நம்பாது.

42. தர்மத்தைக் காக்கவென பொய் கூற நேர்ந்தால் அது பாபச் செயலாகாது.

43. கோபத்தின் வசப்படாதவன் சோகப்பட மாட்டான்.

44. நல்லோரைத் தாபமடையச் செய்வது குலத்தையே கெடுக்கும்.

45. உண்மையும் மௌனமும் புலனடக்கமும் நடைமுறை வழக்கமாகக் கொண்டவர் வாய்மொழி பொய்க்காது.

46. கண்களால் உற்றுப் பார்த்துத் தூயதென உணர்ந்த இடத்தில் அடி வைத்து நட.

47. அன்னமிடப் பசித்த வயிறே தக்க இடம்.

48. அடக்கமின்மை அகல, மனமடங்க, கானல் நீர் போன்ற பொருளில் மனமிழ்ந்து அதனை நோக்கி ஓட்டம் நிற்க, உயிரினமனைத்தும் எதிர்பார்ப்பற்ற தயை பரவ பரம்பொருளே அருள்புரிவீர்.

49. இலக்கண சுத்தமான மொழிப்பயிற்சி காலன் வரும் போது காக்காது.

---

48. ஷட்பதீஸ்தோத்ரம்.

49-69 பஜ கோவிந்தம்.

50. பணவருவாய் பற்றிய வேட்கையை விடு., உன் உழைப்பால் பெறப்படுகிற செல்வத்தைக் கொண்டே உன்மனம் களிக்கச் செய்வாய்.

51. அழகும் கவர்ச்சியும் காட்டி உன்னை மயக்குவது வெறும் தசைப்பிண்டமும் கொழுப்புமே. இதன் மயக்கத்திற்கு ஆட்படாதே.

52. வாழ் நாள் என்பது தாமரை இலைமேல் படர்ந்த நீர்த்துளிபோல், நிலையற்றது. கணத்தில் மறையக் கூடியது. நோயும் திமிரும் சோகமும் உன்னைக் குலைத்துவிடும். இதனைச் சத்மென நினையாதே.

53. சொத்து சேர்க்கிறவரை உற்றார் உறவினர் அண்டி நிற்பர். உடல் தளர்ந்தால் இருக்க மாட்டார். சொன்ன சொல் கேட்க அருகில் ஒருவரும் இருக்கமாட்டார்.

54. மூச்சும் பேச்சுமிருக்கும் வரைதான் நலம்விசாரிப்பர். அதன் பின் மனைவிகூட அருகில் வரமாட்டாள்.

55. பாலியத்தில் விளையாட்டே பொழுதுபோக்கு. வாலிபத்தில் உடலின்பமே பொழுதுபோக்கு, முதுமையில் இல்லாததைப்பற்றிய கவலையே பொழுதுபோக்கு. பரம் பொருளிடம் எவரும் தன் பொழுதைக் கழிக்கமாட்டார்.

56. ஏதோ வினை துரத்த ஒருவன் மனைவியாகிறாள். ஒருவன் மகனாகிறான். அவர்களுக்கு நீயார்? ஏனிந்தத் தொடர்பு? சிந்தித்துப்பார்.

57. நல்லோருடன் பற்றுடன் பழகு. அது வாழ்க்கைப் பற்றிலிருந்து விடுவிக்கும். பற்றற்ற நிலை கலக்கத்தை நீக்கும். கலக்கமும் நீங்கினால் மனமும் அறிவும் சலனமடையாது. ஜீவன் முக்திக்கு அதுவே வழி.

58. வாலிபத்தில் ருசிமிக்கதாயிருந்த உடலின்பம் முதுமையில் காணோம். நீர் வற்றிய பின் அது குளமா? குட்டையா? செல்வம் குறைந்தபின் சுற்றம் சூழுமா? (உடலின்பத்திற்கு வாலிபமும், குளமாயிருக்க நீரும், சுற்றம் சூழ்ந்து நிற்க செல்வமும் உகந்தவை. இவை நம்மோடு நித்யத் தொடர்புள்ளவையல்ல.) இந்த உண்மை அறிந்தால் வாழ்க்கைப் பிணிப்பு ஏது?

59. செல்வமும் சுற்றமும் வாலிபமும் (நித்யமல்ல) கொண்டவன் எனச் செறுக்காயலையாதே. உன்னை கணத்திற்குக்கணம் மாற்றிக் கொண்டே வருகிற காலம் கணத்தில் உன்னிடமிருந்து எல்லாவற்றையும் பறித்துக் கொண்டுவிடும்.

60. பகலும் இரவும் காலையும் மாலையும் பனிநாளும் கோடையும் கணத்தில் தோன்றி மறைகின்றன. மறுபடி மறுபடி காணப்படுகின்றன. காலனின் விளையாட்டு இது. ஆயுள் அறியாமலே மறைகிறது. ஆனாலும் பெருத்த எதிர்பார்ப்பு மனத்தை விட்டகல்வதில்லை.

61. ஆண்டி, பண்டாரம், சமணன், துறவி என வயிற்றை நிரப்ப உதவுகிற வேஷமாகவே ஆகிவிட்டது கண்டும் காணாமல் உணராமல் இருக்கும்வரை இவை அனைத்தும் வேஷம் தானே. உண்மையான துறவல்லவே.

62. உடல் நலிந்து மெலிந்து பல்விழுந்து நரை திரை மூண்டு கம்பின் துணையின்றி நடக்க இயலாத நிலையிலும் ஆசை என்னும் சக்தி அகலவில்லையே!

63. குளிரிலிருந்து காக்கத் தங்குமிடமில்லை. மரத்தடியில் முழங்காலில் முகவாய் அழுந்த குளிர்

காய்ந்து, யாரேனும் அளித்ததைக் கையில் வாங்கி உண்டு வாழ்பவனுக்கும் எதிர்பார்ப்பு குறையவில்லையே!

64. கங்கையிலும் கடலிலும் நீராடினாலும், விரதமும் தானமும் செய்தாலும் ஆத்மஞ்ஞானம் ஏற்படாத வரை ஸம்ஸாரக்கட்டு அகலாதே!

65. நீண்ட தியான வைராக்ய மிருந்தால் கோவினடியும் மரத்தடியுமே மாளிகையாகும். தரையே மெத்தையாகும். தோல் ஆடையாகும். அனைத்தும் சுகம் தருமே!

66. புகவத் கீதையின் ஒருபகுதியை மனத்தில் பதித்துக் கொள்வாய். கங்கை நீரை ஒருதுளி பருகுவாய். பகவான் நாராயணனைச் சிறிது வழிபடுவாய். உன்னைப்பற்றி யமனது கவனம் நேராது.

67. உன்னிடமும் என்னிடமும் மற்ற இடத்திலும் பொதுவாக பகவான் ஹரியே காணப்படுகிறார். அப்போது உனக்கு என்னிடம் ஏன் பொறாமை? (என்னிடத்திலுள்ள அதே அளவில் உன்னிடத்திலும் உள்ளதே?) எங்கும் அவரொருவரே காணப்படுவதால் பேதவுணர்வு ஏன்? இவன் எதிரி. இவனுடன் போரிடுவேன். இவன் நண்பன். இவனுடன் ஒற்று வாழ்வேன் என்றெல்லாம் மனத்தைச் சிதறவிடாதே. மனம் சமநிலை பெறட்டும்.

68. கீதையையும் விஷ்ணு ஸஹஸ்ரநாம துதியையும் திரும்பத் திரும்பப் பாடு. பகவானின் உருவத்தை மனத்தினுள் காண். நல்லோருடன் பழகு. எளியோருக்கு உனது செல்வத்தை வழங்கு.

69. பொருள் பொருட்படுத்த வேண்டியதல்ல. துன்பம் தரவல்லதும் அல்ல. அதனால் சுகமில்லை. பொருள் கொண்டவன் பெற்ற மகளிடமும் பயப்படுவான். இது எங்கும் உள்ளநிலை.

70. அறிவில்லாதவனிடமுள்ள செல்வம் துன்பம் விளைவிக்கும்.

71. அறிவாளி அழகற்றவனாயினும் மனத்தைக் கவர்வான்.




---

70-71 உபநிஷத் பாஷ்யம்.